தஞ்சை சரஸ்வதி மகால் வெளியீடு எண். 221.

# அகத்தியர் 1200 - ல்

# சதாசிவத் தியானம்

## (மணி மந்திர மருந்து)








தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூல்நிலையம்

1990)

விலை ரூ. 7—00

தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு எண். 221

அகஸ்தியர் 1200 - ல்

# சதாசிவத் தியானம்

(மூலிகை, கற்பம், அஞ்சனம், சாலவித்தை)

பாடலும் — பொழிப்புரையும்

சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியர்:

தமிழக வரலாற்று அறிஞர், கல்வெட்டுக்கலைஞர் கணியனார்,

கரந்தை, பேராசிரியர். சி. கோவிந்தராசனார்

சிறப்பு ஆராய்ச்சியாளர்,

மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூல் நிலையம்



1990] [விலை ரூ. 7—00

# வெளியிடுவோர் முன்னுரை

—★—

'அகத்தியர் 1200—ல் சதாசிவத் தியானம்' என்ற இந்நூல் தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தின் வெளியீடாக வெளிவரும் மறைஞானக் கலைத்துறையின் முதல் நூலாகும். 'ஞானம்' — சான்றாண்மை நிலையினின்றும் சமுதாயப் பயன்பாட்டிற்கு வரும்போது உருவாகும் ஞானக் கிளைகளுள் மறைஞானக் கலையும் ஒன்றெனலாம். மனிதன் தமது புலனாற்றலால் செயற்கரிய செய்யுந்திறன் மிக்கவன் என்பதனை இத்தகைய கலைப் படைப்புகள் புலப்படுத்துகின்றன.

'மணி, மந்திரம், மருந்து' என்ற மூன்றும் ஞானிகள் சமுதாயத்தின் மீது காட்டிய பரிவால் விளைந்த பயன்பாட்டு வாழ்வியல் நெறியாகும். இவற்றுள் மருந்து எல்லோர்க்கும், எல்லாக் காலத்திற்கும் பயன் தரத்தக்கதாதலின் விளங்கி வருகின்றது. ஆயின் மணியும், மந்திரமும் ஒரு சிலரிடையே மட்டும் பயிலப்படுகிறது. ஏனெனில் இவை எவ்வளவுக்கெவ்வளவு மனித சமுதாயத்திற்கு நல்லன செய்யமுடியுமோ, அவ்வளவுக் கவ்வளவு தீமையும் விளைக்கவல்லன. ஆதலின் இவை குறித்த செய்திகள் அவர்களுக்குள்ளாகவும் மறை பொருளனவாகவே கையாளப் படுகின்றன.

இத்தகு அரிய மறைஞானக் கலைப் படைப்பு ஒன்றினை இந்நூல் வடிவில் தமது ஞான முதிர்ச்சியுடன் பேராசிரியர் திரு. சி. கோவிந்தராசனார் அவர்கள் எளிய நடையில் பதிப்பித் துள்ளார்கள். பாடகச்சேரி சுவாமிகள், திருவண்ணாமலை துந்தினா சுவாமிகள் போன்ற பெருஞ்ஞானிகளின் சீடராக இளமையில் பெற்ற சித்தக் கலைத் தேர்ச்சியால் இவ்வரிய நூலாக்கத்தினைத் தந்துள்ள அவர்கட்கு எம் நன்றி.

# முன்னுரை

உலகில் மானுடராய்ப் பிறந்து, முற்பிறவியில் செய்த நற் பயனாலும், பிறப்பின் உண்மை நிலை அறிதலாலும், முயற்சி யாலும், ஞான யோக சித்து ஆகியவற்றில் சிறந்திருந்த சான்றோர்கள் பலராவர்.

அவர்களுள், தமிழகத்தில் நிலவிய சித்தர்கள் பலராயினும், பதினெண் சித்தர்களே வழக்கில் கூறப்பெற்றுள்ளனர். இவர் களால் அறியப் பெற்ற விஞ்சைகள் எண்ணிலாதனவாகும். அவற்றுள் மக்கள் நோய் தீர்க்கும் மருத்துவம், பிராணிகட்குப் பிணி தீர்க்கும் வாகடம் முதலானவற்றோடு, காலக்கணிப்பாகும் சோதிடம், மந்திரம் அதற்கமைந்த சக்கரம், வசியத்திற் கமைந்த குளிகை. திலகம், பகைவரை அடக்க கற்பம், கரு, செயலேவு ஆகியவற்றிலும் தேர்ந்து தெளிந்து மக்களிடையே மதிப்புடன் இருந்துள்ளனர்.

## சித்தும், சித்தர் வளர்த்த நெறிகளும்

மூச்சு நிலையை உணர்வாலறிந்து அதனைப் பயிற்சி வழி இயக்கும் ஆற்றல் படைத்தவன் யோகி. சிந்தனை வளர்ச்சியால் தன்னையும் சூழலையும். தலைவனையும் அறிவுத் தெளிவினால் உணர்ந்து புலனடக்கமுடனும் வாழ்வில் உயர்நோக்குடனும் செயல்படுபவன் ஞானி பல சித்து வித்தைகளைக் கற்றுத் தேர்ந்து, மக்கள் மகிழவும், மருளவும் செய்துகாட்டித் தனி நிலையில் வாழ்ந்தவன் சித்தன்.

சித்துக்களில் வல்லோர் ஞானமும் யோகமும் அறிந்தவ ராகவும் இருந்துள்ளதனைப் போகர் ஏழாயிரம் என்னும் சாத்திரமும் பதினெண் சித்தர் பாடல்களும் நன்கு உணர்த்து கின்றன.

ஓரளவு அறிமுகம் செய்த நிலையில் சித்தி பெற்றுள்ளார். திருநெல்வேலி, பிரும்மஞானி சுந்தர சுவாமிகள் உயிர்ப்பித்தல் போன்ற சித்து அற்புதங்களை நிகழ்த்தியுள்ளார்கள்.

பன்றிமலைச் சுவாமிகள், சத்தியசாயிபாபா போன்ற பெரியோர்கள் அற்புதங்கள் பல நிகழ்த்தி வருகின்றனர். நாட்டில், ஆங்காங்கே பெண்களிடத்தும் ஆண்களிடத்தும் சித்து நிலைத் தோன்றி, தெய்வ வழிபாட்டிலும், குறி சொல்லுதலிலும் அற்புதங்கள் நிகழ்ந்து வருவத்னை அறிய முடிகின்றது. இவ்வா றெல்லாம் நாட்டில் ஒரு சிலர் ஈடுபட்டு இயங்கி வருவதெல்லாம் பண்டைய சித்த நெறியின் வழிவழித் தொடர்ச்சியென்றே கொள்ளலாகும்.

## சித்தர் நூல்கள்:

சித்தர்கள் தாம் அரிதில் கண்டுணர்ந்த மருந்துகளையும் மந்திரவித்தைகளையும், கோள்நிலைக் கணிப்பினையும் உலகுக்கு அறிமுகம் செய்யும் அருள்நோக்குடன் சுவடிகளில் எழுதி வைத்தனர். மாணாக்கர்கட்கு நேரில் கற்பித்து அக்கலைகளை வளரச் செய்தனர். ஆதி சித்தர்களின் மரபினைத் தழுவிய நிலையில் கால வழக்கில் தோன்றிய சித்தர்களும் சித்துநெறி உணர்ந்தாரும் கண்டறிந்தவற்றை நூல்களாகச் செய்துள்ளனர். அவற்றைப் பற்றிய விளக்கம், செய்முறை பயன் ஆகியவற்றைப் பாடல்களாகவே செய்துள்ளனர். பாடல்களில் பயின்றுள்ள மொழி நிலை, பாமர வழக்குச் சொற்களாகவும், கொச்சைச் சொற்க ளாகவும், வேற்றுப் பொருள் பொதிந்த படைப்புச் சொற்களாகவும் இருக்கின்றன. மருத்துவம், சோதிடம், மந்திரம் ஆகிய நெறிகளில் கிடைத்துள்ள நூல்களில் பெரும்பான்மையான நூல்கள் இம் முறையிலேயே எழுதப்பட்டுள்ளன. அவற்றுள் திரிந்து தேய்ந்த பாமர வழக்குச் சொற்களே மிகுதியாகக் கையாளப் பட்டுள்ளன.

இவ்வாறு நூல்கள் மொழிநிலையில் அமைந்துள்ளதற்குரிய காரணங்களை ஆராய்தல் இன்றியமையாததொன்றாம். தமிழ் மொழியில் தேர்ச்சிபெறாத நிலையில் சித்து நெறிகளில் தேர்ந்

நூலின் மொழிநடை, செய்தி, குறிப்புகள் ஆகியவற்றைக் கொண்டு நூல் பிற்காலத்தது என்பதை அறிய முடிகின்றது. ஆனால் நூலில் சொல்லப்படும் அறிமுகவுரைகளும், நூலின் பெயரும் பண்டையசித்தர் சொல்வதாகவும், அவர் பெயரால் ஆனதாகவும் காட்டியுள்ளமை குறிப்பிடத் தக்கதாகும்.

பிற்காலத்தில் திகழ்ந்த சித்து நெறியாளர்கள் பின்பற்றியது பண்டைய சித்தர்களின் நெறியேயாகும். அவ்வழக்கு மதிப்பேற்றம் பெறுதற்கென்றே அவர்கள் பெயரால் நூலையும் நூன்முறை களையும் குருவழிப்போற்றும் பணிவுடன் செய்தளித்துள்ளனர் என்பது விளங்கும். இம்முறையிலேதான் பல மருத்துவ நூல்களும் மந்திர சோதிட நூல்களும் வழக்கில் வந்துள்ளன. குறிப்பாக, புலிப்பாணி வைத்திய சிந்தாமணி, தேரையர் பால வைத்தியம், கும்பமுனி வாக்கியம், கோரக்கர் வாகடம் என்பன போன்ற பெயரமைந்த நூல்களைக் காட்டலாகும்.

## அகஸ்தியர் ருத்திர தியானம்:

இந்நூல் அகத்தியர் நூன்முறைகளைத் தழுவிச் செய்யப் பட்டுள்ளது. அகத்தியர் 1200–ல் கண்ட தியானங்களில் சிலவற்றைத் தேர்ந்து தொகுத்துத் தரப்பெற்றுள்ள நூல், என்று பொதுவாக அறியத்தக்கதாக இருப்பினும் மூன்று சித்தர்களின் முறைகளில் ஒருசிலவற்றைத் தேர்ந்து தெளிந்து இந்நூலாசிரியர் தொகுத்தளித்துள்ளமைப் புலனாகின்றது.

1. அகத்தியர்–“இதனையெல்லாம் தெரியாமற்றான் அடக்கி வைத்தார் ஆயிரத்தில்” (பாடல்—1)

2. “இன்னமொரு வித்தை கேளு, நஞ்சுண்டார் எனக் குரைத்தார் நல்லவித்தை” (பாடல்—55)

3. “பொறுக்குமடா கமலத்தோன் பூட்டி வைத்த—வித்தை” (பாடல்—7)

என்ற பாடற் பகுதிகள் தரும் செய்திகளால், இந்நூல் அகத்தியர், நஞ்சுண்டசித்தர், கமலமுனி ஆகிய சித்தர்களின் நெறிமுறைகளுள்

கேளு, பாரு, மாட்டியோது,மானம்பாடி, பண்ணிவை, பேசுறேன், ஆசுறேன், முழுங்கலாச்சு, மளுங்கலாம், அப்பாலே போ, பெறுக்கும், காறடா, தோணும், வேணும், முளிக்கும், ராக்காலம், தொளிலாளி, முக்கு, பாளடா, களட்டுவாறு, மாத்தம், மாத்தான், வயித்தியம், வருகும், என்ற ஒருசில சொற்களைக் கட்டலாகும்.

## உரை-நிலை:

தந்திரச்சொற்களாகவும், மந்திரச் சொற்களாகவும், பொருள் மாற்றச் சொற்களாகவும் புனைந்து உணர்த்தியுள்ள இந்நூற் பாடல்களை முறைப்படுத்தி, சொற்களின் பதனறிந்து பொருள் கண்டு உரைசெய்வது அரிய செயலேயாகும். இதற்கு இந்நூல் போன்ற நூல்களில் நற்பயிற்சியும் அனுபவமும் இன்றியமையாத தாகும்.

யான் இளமைக்காலத்தில், கரந்தைத் தமிழ்ச்சங்கத்தில் மாணக்கனாக இருந்தபோது (கி.பி. 1938-40) சங்கத்தின் ஒரு பகுதியாக இணைந்திருந்து மக்கள் பிணிதீர்க்கும் இல்வச மருத்துவச்சாலையில் இருந்து தொண்டு செய்து வந்தேன். அதுபோது மருத்துவச்சாலைக்குரிய மருந்துகளை சூரணம், பற்பம், செந்தூரம், மாத்திரை ஆகியவற்றை அவ்வப்போது வந்திருந்து, புடத்திலிட்டும், கல்வத்திலிட்டும் ஆக்கித்தந்த மகான் குருநாதர் பாடகச்சேரி சாமிகளாவர். அவரிடமிருந்த நூல்களை அவர் வழி நின்று கற்றறிந்ததோடு அவர் காட்டிய செயல்முறைகளையும் ஓரளவு கற்றிருக்கும் திறனாலும், திருவண்ணாமலை துந்தினா சுவாமிகள் என்னும் பரதேசிகளிடம் சோதிட நூல்களைக் கற்றுணர்ந்த தெளிவாலும், மருத்துவ மந்திர சோதிட நூல்களில் காணும் அரிய சொற்களுக்கும் பரிபாஷைகட்கும் அமைந்த பொருளறிந்து கொண்டிருந்த பயிற்சியாலும், இச்சிறந்த வசிய மந்திர, குளிகை சாதனை களுக்குரிய பாடற்பொருளை நன்குணர்ந்து பொழிப்புரை எழுதியுள்ளதோடு, அரும் பதவுரையும் தந்துள்ளேன்.

## மிருகங்கள் வசியம் — வாய்க்கட்ட:

சித்தர் நெறியில் கொடிய மிருகங்களை வசியமாக்குதல் வாய்க்கட்டுதல் ஆகியவற்றிற்கு மந்திர உச்சாடனங்கள் கூறப் பட்டு வழக்கில் வந்துள்ளன. சித்தர் இத்தகைய முறைகளையு ஏன் கண்டிருக்கவேண்டும், என்று ஆராய்வோமானால் அதற்கு விடை விபரம் கிடைக்காமலில்லை.

சித்தர்கள் மக்கட்கு உண்டான பிணிகளைத் தீர்க்கும் மருந்துவகைகளைச் செய்ய, அதற்குரிய மூலிகைகள், வேர்கள், பட்டைகள், கனிப்பொருள்கள் ஆகியவற்றைத் தேடி காடு களிலும் மலைகளிலும் அலைந்துள்ளார்கள். அது போது அங்கு வாழும் புலி, கரடி முதலான கொடிய விலங்குகள் அவர்களை எதிர்பட்டுத் தாக்கலாகும். அக்காலத்தில் அவர்கள் தன்னைக் காப்பாற்றிக்கொள்வதோடு அவ் விலங்குகளையும் வசியப்படுத்தி அடக்கும் மந்திரங்களை மரபுவழி சித்தியாக்கிக்கொண்டுப் பயன் படுத்தியுள்ளனர். இவ்வரிய செயலைக் கட்டுமந்திரம் என்பர். இதனை இந்நூலின் 32-ஆம் பாடல் நன்கு விளக்குகின்றது.

## அரிய சாதனைகட்குக் குளிகை:

மந்திரத்தால் நன்மையும் செய்யலாகும் தீமையும் செய்ய லாகும். தீமை செய்வதற்குரிய மந்திர தந்திரங்களைச் சித்து நெறி காண்பித்திருப்பினும். இதனைச் செய்யாதே, பாவம் என்று எச்சரிக்கையும் தந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

நன்மை தருவதாகச் செய்யும் முறைகளைச் செய், செய் என்று ஊக்கப்படுத்தப் பெறுகின்றது. அத்தகைய நன்மையைச் செய்கின்ற வித்தைகளுள் சிறந்தொன்று 'பஞ்சதரு வேர் குளிகை' யாகும்.

இதனைக் கற்புடைய மனையாளுக்கு அணிவிப்பின் வெற்றுப்பாத்திரங்களில், வேண்டிய சோறு, குழம்பு, கறிவகைகள் உண்டாகவேண்டுமென்று அவள் தொட்ட அளவில், வேண்டிய அளவினை அப்பாத்திரங்களில் பக்குவமாகச் சமைத்த நிலையில்

## மந்திரத்தால் மாய உருவங்கள்:

சதாசிவ மந்திர தியானத்தினாலும் வக்கானத்திக் குருவி மூலிகைவேர் (பாடல்-7) ஆகியவற்றாலும் மனிதவுருவத்தை நாய், கழுதை, எருமை ஆகிய உருவங்களாக மாற்றிக் காண்பிக்கவும். தன்னையே உருமாற்றம் செய்து கொள்ளவும் உத்திகள் கூறப் பட்டுள்ளன.

பச்சிலைச் செடியொன்றின் வேரிற்கு இத்தகைய அற்புத சக்தியா! என்று வியக்கத் தோன்றும். வேர் என்ற அளவில் எத்தகைய சக்தியும் இருக்காது. மருந்திற்குரியதாக மட்டும் ஆக்கிக் கொள்ளலாகும்.

அவ்வேரினைக் குளிசம் செய்து மந்திர உருவேற்றி குளிகை யாக்கி உச்சாடனத்துடன் ஏவ, அவ்வேர்க் குளிகை மாயா சாலங்களை உண்டாக்குகின்றது. வாயில் அடக்கிக் கொள்ள மாய உருமாற்றங்களை உண்டாக்குகின்றது. பார்ப்பதற்கு நாய், எருமை போன்று தோன்றும் சித்து நிகழ்கின்றது.

## கட்டு மந்திரங்கள்:

கட்டு என்னும் மாந்திரீகக் கலைச் சொல், தன் வசப் படுத்தல் என்னும் பொருளுக்கமைந்ததாகும். சித்து செய்வோன், சூழ்நிலையின் காரணமாக, விலங்குகளையும், மக்கள், சபையோர், ஆகியவர்களையும் தன் வயப்படுத்த விரும்பும்போது அதற்குரிய குளிகையினைக் கொண்டும், மந்திர உருவினைக் கொண்டும், ஏவுதல் செய்து வெற்றி பெறுவர். அந்நிலையில் விலங்குகள் செயலற்று நிற்பனவாகும். சபையோர் மனமடங்கி நாவடங்கி மாந்திரீகன் ஏவினவழிச் செயல்படுவர்.

இவ்வித்தையினை, வாய்க்கட்டு, சபைக்கட்டு என்றும் நூல்கள் குறிக்கின்றன. இச்செயல் கண்கட்டு வித்தையின் ஒரு திறமாகுமென்றும் கூறலாகும்.

"மனவாக விதிப்படியே சபையில் பூசி
மந்திரமும் இதுதாண்ட"

"நிலவாகச் சபையடங்கும் அரசர் நாவும்
நெடுகலுமே அடங்கிவிடும்"

என்றறிவிக்கும் (பாடல்–31) பாடல் தரும் விளக்கத்தினால், நெற்றியில் பூசிச் சென்று வசியமாக்கும் நீறு (சுண்ணம்) பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன.

அரசனையும் சபையையும் சித்தர்கள் தன் விருப்பாகக் கட்டும் செயல்கள் நிகழ்வதனை மட்டும் ஆசிரியர் கூறவில்லை.

அரசனது வேண்டுகோளுக்கு இரங்கி, தன்னைப் பணிந்து குருவாகக்கொண்ட அரசனுடைய நாட்டைக் கைப்பற்றும் முயற்சியாகப் பெரும் படையுடன் வந்து சூழ்ந்துகொண்ட பகையரசனை, அஞ்சி, வெறுண்டு படையுடன் திரும்பி ஓடுமாறு செய்ய மணி மந்திரங்களைப் பயன்படுத்திப் பாதுகாத்துள்ளனர்.

"தளமதனை நோக்கிச் செப்பக்கேளு
ரணத்திலே வராமல் ஓடிப்போவான்" (பாடல்–35)

"தான்பார்த்த சமர்க்களத்தில் தூவிப்போடு
சத்திராதி நாவெழும்பான் சேனையோடு" (பாடல்-36)

"பாரடா படைகுலைந்து ஓடும் பாரு
பரராசன் ஓடியூர் புகுவான் பாரே
யான்பார்த்த வித்தை யடா"

என்ற பாடற்பகுதிகள்காட்டும் நிகழ்ச்சிகளால், ஆசிரியராகிய சித்தர், தன் அன்புக்குரிய அரசனுக்குப் பகையால் துன்பம் வந்தபோது, செய்து அனுபவமாகக் கண்ட கட்டு வித்தையைப் புலப்படுத்தியுள்ளார் என்பது தெளிவாகும்.

''உற்பனமாய் மகாகொடுமை செய்யாதே நீ
பண்டுபா ருனக்குரைத்த குருவின் வார்த்தை
பத்தியாய் மனத்தில் வைத்துக் காப்பாத்துவாயே''

இந்நூலைப் படித்துத் தேர்ந்துள்ள சித்துநெறியாளர்கள் மந்திரவாதிகள், தீவினைச் செயல்களை வேடிக்கை யாகவும், விளையாட்டாகவும் செய்யக்கூடாது என்பது சித்தரின் சத்திய வாக்கு.

தன்னுடைய பாதுகாப்பிற்கு மட்டும் ஓரளவு பயன்படுத்தி' அது தீர்ந்தவுடன் செய்வினையை மாற்றிப் பணிந்த பகைவனுக்கு அருள்செய்ய வேண்டும். (பரிகாரம்) இவ்வாறு செய்யாமல், பொருள் சேர்ப்பதற்கும், காம குரோத இச்சைகளை நிறைவு செய்து கொள்வதற்கும், பிறருக்காக அவர்கள் காட்டிய மக்களுக்கு கேடு செய்வானானால், தீராத பாவம் உனக்கு வரும், தீராத நோய்கள் உன்னைச் சேர்ந்து வருத்தும். தெருவில் எச்சிலைப் பொறுக்கும் இழி நிலையை அடைந்து போவாய் என்று ஆணையுடன் அறிவிக்கின்றார். (பாடல்–62)

நல்லனவற்றைச் செய்து அனுபோக சித்தியுடன் பிறர் புகழ இருப்பாயாக என்றும் காப்புரையுடன் வாழ்த்துரையும் வழங்கியுள்ளார்.

## நிறைவு:

நூல்களினின்றும் தனிப்புதுமை பெற்ற இந்நூல் போன்ற நூல்கள் சித்த நெறிமுறைகளை அறிமுகப்படுத்தும் நூல்கள் என்ற அளவில் மக்கள் அறிந்துகொள்ளும் அளவே ஏற்புடையாதகும். சுட்டிக் காட்டிய திறங்களைக் கற்றுத்தேர்ந்து, செயல்முறைகளில் ஆக்கம் பெற்றார். சித்தி பெற்ற அளவில் நிறைவான மனத்துடன் மகிழ்ந்திருத்தலே சிறப்பமைந்ததாகும் என்பது சித்தர் வாக்கு. ஆதலின், இந்நூலினை கற்றுணர்ந்தார் தீய நெறிக்கு அறிவியலைச் செலவு செய்து பாபியாகாமல், மக்கள் மதிக்கும் நற்செயல்களைச் செய்து மாண்புடன் வாழ முருகன் திருவருள்நிகழும் என்ற அளவில் இந்நூல் பயன் பெறுவதாகும்.

## அகஸ்தியர் 1200 - ல்

# சதாசிவத் தியானம்



### நூல்

### சதாசிவ - ருத்திர தியானம்

**பேசுரேன் ருத்திர சங்கார மூர்த்தி**
**பிறகுமிக வுக்கிர சங்காரம் கேளு**
**பூசிரேன் றங்அங் கீசறீங் ஙங்ங் வென்று**
**பூட்டுவாய் ருத்திர சங்கார மாச்சு,**
**ஆசுரேன் இதனை யெல்லாம் தெறியாமற் றான்**
**அடக்கிவைத்தான் ஆயிரத்தில் வெளியாய்ச்**
**சொன்னேன்**
**கூசிரேன் புள்ளொருகை வானாங் கூட்டில்**
**போயெடுத்துத் தீயிலிடக் கூடு வேகா. 1**

## பொழிப்புரை:

சொல்லுகின்றேன், ருத்திர சங்காரமூர்த்தியின் மகா வீரியப் பெருமையைக்கேள். பூசிக்கின்றேன், றங் அங் கீச றிங் ங் ங் ங் என்று. இதைப்போல் நீயும் திறமையாகச் செபிப்பாய் அதனால் ருத்திர சங்காரம் கைக்கூடும். ஆசையோடு சொல்லுகிறேன். இதனையெல்லாம் தெரியாமல் மறைமுகமாக ஆயிரம் பாடலில் அடக்கி சொல்லி வைத்தார். வெளிப்படையாகச் சொல்லக் கூசுகிறேன்.

பறவைகளுள் ஒருகை வானாங் குருவிக்கூட்டைப் போய் எடுத்து வா. அக்கூட்டைத் தீயிலிடக் கூடு வேகாது.

(ஆசுரேன்—உள்ளதை உள்ளவாறு சொல்லுகிறேன்)

(பொ-ரை) சக்தி வாய்ந்த நீலக்கொடிவேலி மூலத்திற்கு ருத்திர தியானம் செய்ய, தேவிமகாமாயைப் பெண் அழகான வடிவில் காட்சிக்குத் தோன்றி நடமாடுவாள். மந்திர உச்சாடனம் செய்ய தும்புரு, நாரதர் இருவரும் தோன்றி காணற்கரிய நடமிட்டு தம்பூர் வீணை பொருந்த இசைத்து ராகம் பயிலுவார்கள்.

உனக்குப் புகழான, சங்கார ருத்திர தியானம் செய்து, குருவி மூலக் குளிசம் எடுத்து மந்திரத்தைச் செபிக்க, தெய்வக்காட்சிகள் யாவும் மறைந்து போகும். சோதித்துப்பார். இச்செயலுக்குத் திரு. சங்கார ருத்திர தியானமே உருவாகும்.

## மகேஸ்வர தியானம்

**தியானத்தில் மயேஸ்வரத்தின் தியானம் கேளு**
**சிங் மங் றீங் கென்றேதான் செபித்தால் லட்சம்**
**மாட்டியோதி மானம்பாடிக் கூட்டை தன்னை**
**வாங்கிமுன்போல் வேர்குளிசம் பண்ணி வைத்தால்**
**பாரமென்ற கடும்பாரம் எடுக்க லாமே**
**தியானத்தால் வேராலும் சித்தி யாச்சு**
**சேரவே மூலிதன்னால் வித்தை தன்னைச்**
**செய்துபார் கடப்பாரை முழுங்கலாச்சு** 4

(பொ-ரை) தியானங்களில் மயேஸ்வரத்திற்குரிய தியானத்தினைக் கேட்பாயாக, சிங் மங் றீங் என்று வசத்தால் லட்சம் உரு தொடந்து ஓதி, மானம்பாடிக் குருவிக் கூட்டை முன்போல் கொண்டுவந்து அதிலிருக்கும் வேரைக் கண்டு, குளிசம் செய்து வைத்துக்கொள்வாய். கடும் பாரங்களையும் எடுக்கலாம். இது தியானத்தினாலும் வேரின் சக்தியாலும் சித்தியானதாகும். இந்த மூலிகையை குளிகை செய்து அடக்கிக் கொண்டு வித்தைகளைச் செய்து பார்ப்பாயாக. கடப்பாரை போன்ற வலிய பொருள் களையும் விழுங்கிக் காட்டலாகும்.

(குளிசம்—மந்திர உருவேற்றிச் சித்திபெற்ற வேர் மூலம்)

(பொ-ரை) நாயைப்போல் ஆகவென்று செபித்து நோக்க அப்படியே தோன்றுவானானால், நாயடா அதோ வருகின்றது என்பார்கள் பார்ப்பாய். மாய்கையாய் நாய் போல இருந்தவர்கட்கெல்லாம், முன்னர் பார்த்த மானுடவுருமாறி வேற்றுருவாகத் தோன்றும். மாய வித்தை.

சீ அப்பாலே போ போ என்று சொல்லித் திரும்பவும் மந்திர உச்சாடத்தினை முறையாகப் பார்த்துச் சொல்லி, ஈயைப்போல் எருமையைப் போல் கழுதையைப்போல் இருக்கிறதென்று நீ பார்த்துச் சொன்னால் அப்படியே அவன் தோன்றுவான். இந்த மாயையினைப் பார்ப்பாயாக.

## வக்கனாத்தி வேர் - குளிகை

**இருக்குமடா வக்கனாத்தி மூலி வேரை**
**இருதிறமர்(ம்) யந்திரவே ராகும் மூலம்**
**பெருக்குமடா வாயினால் சொன்ன தெல்லாம்**
**பெண்ணுக்கும் ஆணுக்கும் தெரியு மப்பா**
**கருக்குருவாய்ச் சொன்ன தெல்லாம்**
**கண்டுகொள் எண்ஆயிரமும் கருதிப் பாரு**
**பொருக்குமடா கமலத்தோன் பூட்டி வைத்த**
**பூருதியானிகரே புகழ்ந்து பாரு. 7**

(பொ-ரை) வக்கானத்திக் குருவிக் கூட்டிலிருக்கும் மூலிகை வேர் இருவகையாக இருக்கும். அந்த வேரினால் வாயின்ால் சொன்னதெல்லாம் பலிக்கும். அந்த வேர் பெண் ஆண் என்ற வகையில் தெரியும். சூட்சமமாகக் கண்டுகொள்ளச் சொன்னதிது இதற்கு மாந்திரீகம் கண்டு கொள். ஆயிரத்தெட்டு உரு விரும்பிச் செய்து பார். விரும்பியதைத் தருவதாக இருக்கும். கமலமுனி மறைத்து வைத்திருந்த வித்தை. தொடங்கு தியானிகரே புகழ்ச்சியாகச் செய்து பார்ப்பாயாக.

(பொ-ரை.) கண்டுகொள்வாய் நம்பியின் மாய மந்திரம். கருணையுடன் விளங்கும் பச்சைவர்ண (நிற) மூர்த்தி (மூலிகை) என்று கண்டுகொள்.

மற்றுமொரு குளிசம் செய்துகொள்ள, கருக்குருவிக் கூட்டை முன்போல் கொண்டுவந்து, சாமர்த்தியமாக அதிலிருக்கும் வேரினை எடுத்து முறைப்படி மணியாகத் திரட்டிக்கொள். அதன் சக்தியைக் கூறுகின்றேன் கேள். முன்னர் இந்த வித்தையில் தேர்ந்துள்ள பெரியோர்களைக் கண்டு வணங்கி, உத்திகளைத் தெரிந்துகொள்.

நீ நினைத்த இடம் தோன்றும். புதையல் தோன்றும் பார். வீணாசையால் தவறுகள் செய்யாதே. சித்தியில்லாமல் போகும். நேர்மையுடன் செய்தால் நீ நினைத்த காரியங்கள் யாவும் சித்தியாகும்.

## வல்லூத்துக்குருவி-பஞ்சதருவேர், குளிகை.

சித்தியாம் வல்லூத்தின் குருவிக் கூட்டைத்
தீய்க்கொளுத்திச் சுட்டாலும் வேர் வேகாது
பத்தியாய் அந்தவேர் வெள்ளை மஞ்சள்
பச்சையொடு சிவந்தவர்ணங் கறுப்புமாகும்
முத்தியாம் பஞ்சவர்ண மூர்த்தி ரூபம்
முக்கியமடா யிதின்விபரம் பிரித்துக் கேளு
சத்தியாந் தீயகளை யிருந்த மூலி
சார்பஞ்ச தரு(தரும்) வேராமே. 10

(பொ-ரை.) சித்தியாகும் வல்லூத்துக் குருவிக் கூட்டைத் தீயில் கொளுத்திச் சுட்டாலும், அதிலுள்ள மூலிகைவேர் வேகாது. அடர்த்தியான அந்த வேர் வெள்ளை, மஞ்சள், பச்சை, சிவப்பு, கறுப்பு ஆகிய ஐந்து நிறங்கள் கூடியதாக இருக்கும். நினைத்தது பலிக்கும் பஞ்சவர்ண மூர்த்தியின் வடிவமான மூலம் முக்கியமானது. இந்த வேரின் சக்தி விபரத்தைத் தனியாகப் பிரித்துக்

உபசார பதார்த்தமெல்லா மங்கு பஞ்சத்ருவே
கொண்டோடு ''மறவணியகா தேவி யீது [ஈயும்
கோதி'' என்றா லிதுகறிகள் சோதியாம் பாரே. 12

(பொ-ரை) பஞ்சதரு குளிகையால் உலகத்தில் உண்டான காரியங்கள் எல்லாங் உண்டாகும். ஒன்றும் குறைவராது. குளிகையை உன் மனைவியிடத்தில் மனமாற்றமில்லாமல், அவள் கழுத்தில், கயிற்றில் பந்தனம் செய்துபோடு. அவள் பாத்திரங் களைத் தொட்டால் போதும். முன்னர் இருந்த அளவில் அரிசி யோடு உணவுக்குரிய சகலவிதமானதும் மேலான விருந்துக் குரியதுமான கறிவகைகளெல்லாம், பஞ்சதருவின் சக்தியே கொடுக்கும். சோறுடன் பதார்த்தங்களை எடுத்துக்கொண்டு செல்.

''மறவணிய கா தேவி யீது கோதி'' என்ற மந்திர உச்சாடனத் தால், இத்தகைய உணவுக் கறிவகைகள் சமைத்ததாகவும் புதிதாகவும் பலவிதமாகவும் உண்டாகும் பார்ப்பாயாக.

## அன்னதானச் சித்து

கொதியம் பாரன்ன சத்திரக் கோடிநீ கட்டிக்
கொண்டிருந்து வந்தவர்க்கு அன்னம் ஈவாய்
நிதியம்பார் உன்னிடத்தில் இருக்கு தென்பார்
நித்தநித்தம் இப்படியே அன்ன மீய்வாய்
பதியம்பா ருன்பாரி தேவி யாச்சு
பார்பதிச்கு நீயுமொரு பரம னாச்சு
கதியம்பா ருலகமெல்லாம் உன்னை மொய்ப்பார்
கேட்டதெல்லா முன்னாலே குமியும் பாரே. 13

(பொ-ரை) உணவுப் பதார்த்தங்கள் ஆக்கிக் கொட்டி வைத்ததைப் போல் உண்டாவதால் சத்திரமனைகள் பல கட்டிக் கொண்டு, அதில் நீயிருந்து பசியோடு வந்தவர்க்கு அன்னம் கொடுப்பாய். இந்த மாயத்தை உணராமல் உன்னிடத்தில் மிகுந்த செல்வம் சேர்ந்து இருக்கின்றது என்பார்கள். நாள் தோறும் இப்படியே அன்னதானச் சித்துசெய்து கொடுப்பாயாக.

கண்டாலுங் கால்நாலு மொளிகள் பித்துங்
கடுவனுட வுயிர்மாப் பிள்ளை தானும்
அன்றேதான் குளிர்ச்சிபெறு நிலத்தில் சேரு
மதுபிடிக்க உபாயமினி யறையி ரேனே. 15

(பொ-ரை.) நன்மையைத் தருகின்ற கஸ்தூரிப் பிள்ளையின் நறுமணமுள்ள தாது உனக்குக் கிடைக்கின்ற காலம் கூடுமே யானால், நடுக்கானகத்தில் சென்று திரிந்து, அது வாழும் வனத்திற்குள் செல்லும்போது, சின்னவடிவில் ஒருபச்சைக் குழந்தையைப்போல் நிற்கும். கால் நான்காகும். விழிகள் பிதுங்கியதாக இருக்கும். ஆணினுடைய தோற்றம் உயிர்ப்பாக இருக்கும். எப்பொழுதும் குளிர்ச்சியான நிலத்தில் சேர்ந்திருக்கும் கஸ்தூரி மானைப் பிடிக்கின்ற தந்திர உத்தியினை இனி விளக்க மாகச் சொல்லுகின்றேன்.

கஸ்தூரிப்பிள்ளை—கஸ்தூரி மான்

பிள்ளை—இன இளமை மரபுப்பெயர் (அணில்பிள்ளை, கீரிப் பிள்ளை என்பதைப் போல)

## கஸ்தூரி–இருக்கும் இடம், பெறும் முறை

அறையிரேன் தீவுகளில் மலைக ளுண்டு
அதிலிருப்பார் வேனலது பொறுக்க மாட்டார்
முறையுடனே ஆள்நாடா காட்டி னுள்ளே
முனைமதியன் சந்திரன் தன் பிரகாசத்தில்
உறையுமடா அவ்விடத்தில் வாலை நாட்டி
உதித்திடு தண்ணீரு விட்டு வைப்பாய்
உறையவே ராக்கால மதனில் சாயும்
உறங்கினால் மறந்திடும் பின்னெழும்
பொட்டாதே. 16

(பொ-ரை.) சொல்லுகின்றேன். தீவுகளில் மலைகள் இருக்கும். மலைமீதுள்ள சோலைகளில் கஸ்தூரி மான் இருப்பார். வெப்பத்தைப் பொறுக்க மாட்டார். அவருக்கமைந்த இயல்புடனே மனிதர் செல்லாத காட்டினுள்ளே முழுமையான சந்திரன் ஒளியில் அவ்விடத்தில் வாலை நிமிர்த்தி நிற்பார்.

## கஸ்தூரி-சஞ்சீவி

இருந்தாற்போல் திரளுமே கட்டி யாக
இனஞ்சேர்ந்து கஸ்தூரி நிச சரக்கு
ஊருமே பொறியாய் வைத்துக் கொண்டால்
உலகத்தில் சூடேது தாக மேது
உருமேகமென்ற கானலேது உள்சூ டேது
சன்னியேது வற்றாநா வறட்சி யேது
கருவான மண்டலத்தில் காண்பா யப்பா
சஞ்சீவி கஸ்தூரி பிள்ளை தானே. 18

(பொ-ரை) கஸ்தூரித் தாது, கற்பூரம் சேர்த்த அளவில் அப்படியே கட்டியாகத் திரளும். கஸ்தூரி என்னும் உண்மையான சஞ்சீவிச் சரக்கு, பக்குவமாகப் பாதுகாத்து வைத்துக் கொண்டால், உலகத்திலுள்ள மக்களுக்கு இந்த சஞ்சீவியினால்—சூடு தனியும், தாகம் இருக்காது. உருமேகமென்ற கானல் நோய் வராது. உள்சூடு என்னும் வெட்டை நோய் நீங்கும். வாதத்தாலாகும் சன்னி வராது. நாவற்றும் வறட்சி இருக்காது.

சஞ்சீவி கஸ்தூரிப்பிள்ளைத் தாதுச் சரக்கினைப் பாதுகாப்பான குளிர்ந்த இடத்தில் வைத்துப் பயன்படுத்தி நலம் காண்பாயப்பா.

கருவான மண்டலத்தில்—மருத்துவகால திட்ட மண்டலத்தில் என்றும் பொருள் தரும்.

## கஸ்தூரியைச் சோதிக்கும் முறைகள்

பிள்ளையிலே கஸ்தூரிப் பிள்ளை யுண்டு
பின்னையுமோர் கஸ்தூரி பட்சி யுண்டு
விள்ளையிலே யிவைகண்டால் இந்தப் பாகம்
மெய்த்திட்டு மகாகுளிர்ச்சி யாகும் பாரு
கொள்ளிகொண்டு கொப்பரையில் வெந்நீர் தானும்
கொதிக்கையிலே அரிசியிடை கஸ்தூரி போடு
உள்ளசலம் குளிர்ந்துபோம் பருச்சை பாரு
உனக்கென்ன யிதுவேனும் பாரு பாரே. 19

கஸ்தூரி மூலிகை உண்டு. அதன் மூலிகை வேரைப் பற்றித் திட்டமாகக் கூறுகிறேன். நீ நன்றாக முயன்று அதன் சக்தியைப் பார்த்துக்கொள்.

## கஸ்தூரிவேர் - வசியக்குளிகை

நாடுவார் கஸ்தூரி மூலி வேரை
  நன்றாகக் காப்பிட்டு முடியில் சூட
சூடுவார் அப்போது சுரமு மில்லை
  சூனியமு மண்டாது சூட்சம் சூட்சம்
தேடுவார் மிடமாது போகம் மீறிச்
  சேருவா ருன்னையனு தினமு மப்பா
கூடுவார் மன்பாக மாகத் தானே
  கொண்டுபா ளுள்ளுக்குக் குளுமை தானே. 21

(பொ-ரை) அறிவுடையவர்கள் கஸ்தூரி மூலிவேரை நாடுவார்கள். அவ்வேரை நல்ல முறையில் பதனமாகக் காப்பிட்டு முடியில் சூட்டிக்கொள்ள, சூட்டிக்கொண்டவர்கட்கிருந்த சுரநோய் அப்பொழுதே தணிந்துவிடும். சூனியமும் நெருங்காது. இது மிகவும் சூட்சமமாகும்.

திடகாத்திரமுள்ள பெண்கள் போகம் அதிகரித்து உன்னைத் தேடுவார்கள். உன்னை நாள்தோறும் மன்மத விகாரத்துடன் உடல் சோரக் கூடுவார்கள். அன்பாக இணைந்திருப்பார்கள். கஸ்தூரி உள்ளுக்குக் குளுமையாக இருப்பதைப் பார்த்துக்கொள்.

## கறும்பூனைக்கல் - குளிகை

குளுமையென்ன கறுமபூனைக் கல்லொன் றுண்டு
  கூறுவா ருலகத்தில் கிடையா தப்பா
வளமையதி னுடையவிஞ்சைப் பூனை வாங்கி
  வயித்தணைத்து சலந்தனிலே வதனம் பார்த்தால்
இளமையகாயமுகந் தெரியா திருந்த தென்றால்
  இதுவிலிருக்கும் கல்லென்று யெனவே நீயும்
உளமையாய்க் காராவின் பால்தான் கேளு
  ஒருபானைக் குள்ளிட்டுப் பூனையை முக்கே. 22

## கருநாய் மணி - வசியம்

கேளடா கருநாயின் வித்தை கேளு
கிறுடிக்கு போதுனிலே கருநாய் மண்டை
வேளடா அடிக்கையிலே கொதிக்கு மூளை
மேவியெடு உள்ளேயொரு மணிபோல் காணும்
பாளடா போகாது மணி யெடுத்து
பரிந்துமுயல், வேட்டைதனை ஆடிப்பாரு
கேளடா முயல்முழுதுங் கையில் சேரும்
கூறுவோ மனுபோகம் பண்ணும் போதே. 24

(பொ–ரை) *கேளடா! கருநாய் மணியின் வித்தையைச் சொல்லுகிறேன் கேள்!*

*உக்கிரமாக வெய்யல் இருக்கும்பொழுது, சூரிய வெப்பம் தாக்கி அடிக்கையினாலே கருநாயின் மண்டையிலுள்ள மூளை கொதிப்படையும். மண்டையினுள்ளே ஒரு மணி போலக் காணும். முயற்சி செய்து எடுத்துக்கொள். அம்மணி வீணாகப் போய் விடாது. மணியைக் கையில் எடுத்துக்கொண்டு, விருப்பம்போல் முயற்சி செய். முயல் வேட்டைதனை ஆடிப்பார். முயன்ற செயலனைத்தும் கைவசமாகும். அதனைப் பயன்படுத்தும் போது செய்ய வேண்டிய முறைகளைக் கூறுவோம்.*

## கருநாய் மணியின் மகிமை

போதையிலே மணியெடுத்து அரையில் கட்டு
புணர்ச்சியுனை மேவும் பின்னே ராகப்
பாதையிலு மிருட்டுவழி தன்னில் போனால்
பசாசேது பேயேது பய மேதப்பா
கோதையர்கள் மோகமடா கொள்ளை கொள்ளை
குருடனுக்கும் தெரியாதோ மணியின் வேகம்
மோதிடவே "ஞாளிவடு காயதேவா
ஓம்" மெனவே மணிக்கிருநூ றுருவைச் சேவி. 25

## குரங்குமணிக் குளிகை

பூமியிலே மணிதனிலே தங்கம் சேர்த்துப்
புத்திரனுண் டாகவொரு பூசை செய்து
சாமியுட கிருபையினால் மங்கை மார்க்கு
தனிகுளிசம் பூண்டிடவே மண்டலத்தில்
நே(மி)முகம தாகுமடா மலடோ யில்லை
நேரிழையாள் பெத்தபிள்ளை வயதே வந்து
காமியா யிருக்குமந்தக் குளவி தானும்
கன்னியிட குளிகைதனை கழட்டு வாயே. 27

*(பொ—ரை) மணியைத் தங்கக் கவசமிட்டு, பிள்ளைப்பேறு உண்டாக சிறந்த பூசை செய்து, சாமியினுடைய அருளினால் பிள்ளையில்லாத பெண்களுக்குத் தனியாகக் குளிசம் செய்து அணிவித்தாயானால் ஒரு மண்டலம் நாற்பத்தெட்டு நாளில் கருத்தரித்த முகப்பொலிவு தோன்றும். மலடு என்பது இல்லை. அவளுக்கு அணிவித்த குளிகையைக் கழட்டிவிடு. அவள் பெற்ற பிள்ளை வளர்ந்து பருவத்தில் காமியாக இருப்பான்.*

மண்டலம்—48 நாள். மலடு—கருத்தரிக்காத இயல்பு.
காமி—காமம் மிகுந்தவன். குளவி—(குழவி) குழந்தை.

## சந்ததி பெருகும்—மணிமந்திரம்

களத்திவிடு மண்டலந்தான் கிடந்தால் போதும்
மகிழ்ந்துதடா கன்னிகைதன் கிரக சாபம்
முளைத்துமே உன்னாலே அடுக்கடுக் கவொரு
மிக்க சந்ததிபெற் றுயர்வா ளப்பா
வளைத்துமே பெருகுமடா மைந்த ரெல்லாம்
மார்க்கண்டன் போலிருப்பார் மணி யினாலே
நிலத்திலே இன்னுமொரு மலடி யான
நேரிழைக்கு முன்பாகமணி மாத்தம் செய்யே. 28

## சபையைக் கண்கட்ட மந்திரம்

கூறுவுக்காய் சபைக்கட்டு மாந்தி ரீகம்
கூறுவோம் அரசனொடு சபையோர் கட்டு
திருகுமிக வாராது குருத்தேவி தேவி
சிங் அங் மங் கென்றே சிறீ மென்று
மருவுக்காய் லட்சமுருச் செவிக்கும் போது
மனுசர்சபை அரசர்சபை வானோர் கூட்டம்
நிருபனே கட்டாச்சு இந்த விஞ்சை
நீக்கார்கள் ராதாக்கள் நிலவுதாமே. 30

(பொ—ரை) கூட்டமாக இருக்கும் மக்கள் சபையைக் கட்ட மாந்திரீகம் கூறுகின்றேன்.

அரசனோடு அவனது சபையோரையும் கட்டு. குற்றங் குறைகள் வராது.

"குருத்தேவி தேவி சிங் அங் மங் சிறீம்" என்று தொடர்ந்து லட்சம் உரு செபிக்கும்போது, மக்கள் சபை, அரசர் சபை, தேவர் கூட்டம் எல்லாம் மாந்திரீகனே கட்டி விட்டாய். இந்த வித்தைதனை பிரபுக்கள் நீக்கார்கள். அவர்களிடத்தில் உனக்குத் தொடர்புதரும் வித்தை இதுவாகும்.

திருகு—குற்றம்.

## கூகை நீறு-சபையைக் கட்டும் வித்தை

நிலவாக சபையடங்கு மரசர் நாவு
நெடுகலுமே யடங்கிவிடும் மண்கூகை நீறு
மனவாக விதிப்படியே சபையில் பூசி
மந்திரமு மிதுதான்டா மனுடற் கெல்லாம்
தினமாறு பூத்தயவான் பேர்க்கு (முதறித்)
தெரிக்கும் பேர்க்குமிது செய்து பாரு
கனவாக நினையாதே கூகை நீறு
கண்டவர்கள் பேசாமல் நா வடங்கும். 31

## பிராணிகள் வசியமாக மந்திரம்

ஓதவே, மான்மரைகள் கலைகள் புல்வாய்
உன்பிறகே தொடரவே உம் வா வென்ன
பூதவே ஐங் றீ யென்று செவிப்போன்
அவர்போலக் கைகாட்ட வருமே பாரு
ஏதவே கறுமுதலைத் தடந்தா னப்பா
இதன்வேரைக் குளிசமிட் டிருக்க வேணும்
கோதவே மான்மரைகள் கலைகள் புல்வாய்
கூப்பிட்டா னென்றுபின் வருகும் பாரே. 33

(பொ—ரை) மான் இனங்களாகிய மரை, கலை புல்வாய் ஆகியவை உன்னைப் பின் தொடர்ந்து வசமாகி வர மந்திரம். 'உம் வா பூதவே ஐங் றீங்' என்று செபித்துக் கையால் அழைக்க அவை உன் பின்னால் வரும் பார்.

இன்னொருமுறை, கறுமுதலைத்தட மூலிகை வேரை (முதலைப் பூண்டு) அதன் வேரைக் குளிசமிட்டு வைத்திருக்க வேண்டும். அதனைக் காட்டிய அளவில், மான் மரைகள் ஆகிய மானினங்கள் கூப்பிட்டானென்று அருகில் வரும் பார்.

மரை — காட்டெருமை.

## வசிய திலகம்

செய்துபார் முற்தபச்சி வேரை யானால்
தின்னவென்று கையிலே பிடுங்கி வந்து
வைத்துப்பா ரதைக்கருக்கி மையாய்ச் சேர்த்து
வளரண்ட யெண்ணெயிலே திலகந் தீட்டு
பெய்துபா ருலகமெல்லாம் வசமாச் சப்பா
பெண்களெல்லாம் கைவசமாம் பிறகு பாரு
கொய்துதான் தலையைவெட்டி போட வென்ற
கோபமுன் போந்தனையும் கும்பிட் டானோ. 34

பகையரசன் செல்வச் செருக்கால் தங்கமாட்டான். வீரமாகப் பேசமாட்டான். படை நிலைகுலைந்து திரும்பி ஓடும். பகையரசன் திரும்பி ஓடி தன்னூரில் புகுந்து கொள்வான். இந்த வித்தையின் மகிமையைப்பார்.

பரராசன்—பிறநாட்டு அரசன்.

## போர்க்கள வசியச் சூரணம்

வான்பார்த்த குருவிதனைச் சுட்டு நீத்தி
மண்கூகை ஆந்தைநீர் மூன்றுங் கூட்டித்
தான்பார்த்த சமர்களத்தில் தூவிப் போடு
சத்திராதி நாவெழும்பான் சேனை யோடு
யான்பார்த்த வித்தையடா உலகத் தோர்க்கு
அரி அரி யென்றது நூறு உருவை யோது
ஊன்பார்த்து உயிர்மறந்து நிற்பா ரப்பா
உள்ளபடி உனக்குரைத்தேன் மெள்ளக் காணே. 36

(பொ-ரை) வான் பார்த்த குருவியை சுட்டு நீறாகச் செய்து கொள். மண்கூகைமண், ஆந்தை எச்சநீர், இவை மூன்றையும் சேர்த்து, நீ பார்த்த போர்க்களத்தில் தூவிப் போடு. கொடிய பகையரசன் வீரம் பேசமாட்டான். சேனையோடு போர் செய்ய வரமாட்டான். யான் நேரில் செய்து பார்த்த வித்தை.

அரி அரி யென்று நூறு உரு ஓது. பகைவர் தன்னையே பார்த்துக்கொண்டு, உயிர் மறந்து கல்போல் நிற்பார்கள். உள்ளபடி உனக்கு இந்த வித்தையைச் சொன்னேன். மெள்ளக் கண்டு கொள்.

நீத்தி—சாம்பலாகச் செய்து. ஊன்பார்த்து—மெய்மறந்து. உலத்தோர்க்கு யான் பார்த்த வித்தையடா.

## அரையாப்புக்கு - மருந்து

தானென்ற அரையாப்பு வந்த தானால்
சமூலமா கவுதும்பை பிடுங்கி வந்து
தானென்ற சூட்சமடா லாட மூலி
நாவினால் உரையாதே அரைத்துப் பூசி

## மன்மத வசிய திலகம்

விட்டுஇவர் மன்மத வசியஞ் சொல்வேன்
வெள்ளெருக்கு மூலம் விஷ்ணு காந்தி வேரு
கோஷ்டமுடன் செங்கழனி அகில்செஞ் சாந்து
கோரேரசனை குங்குமப்பூ பூரமெட்டு
மிளநீராலாட்டி
சட்டமுன் கயிறாக உருட்டிக் கொண்டு
சேவி மோகினிமந் திரத்தை ஓதி
வட்டமட புருவநடு திலகந் தீட்ட
மயங்குவார் லோகமெல்லாம் மயங்கும் பாரே. 39

(பொ-ரை) அதனைவிட்டு, மன்மதவசியம் சொல்லுகிறேன். வெள்ளெருக்கு வேர், விஷ்ணுகாந்திச்செடி வேர், கோஷ்டம், செங்கழுநீர்ப்பு, அகில்கட்டை, செஞ்சாந்து கோரோசனை, குங்குமப்பூ இவற்றோடு பச்சைக் கற்பூரத்தையும் சேர்த்து இளநீர்விட்டு அரைத்து, முறையாக அச்சாந்தினைக் கயிறாக உருட்டிக்கொண்டு, மோகினி மந்திரத்தை ஓதி புருவ நடுவில் திலகமாக வைத்துச்செல்ல கண்டவர்கள் மயங்குவார்கள். உலக மெல்லாம் மயங்கும் பார்.

## நஞ்சுண்ட சித்தர் காட்டிய வித்தை

நவிலலே யின்னமொரு வித்தை கேளு
நஞ்சுண்டா ரெனக்குரைத்தார் நல்ல வித்தை
நவிலுவேன் சாகாத மூலி வேரைச்
சந்திரனில் காப்பிட்டு உறவியில் வாங்கி
நிவிலுவேன் குளிசமது சென்னி மீது
நெகிட்த்திடவே யிதுவயனம் விபரங் கேளு
கவிலுவேன் கைக்குளொரு ஆனெடுக்க வாகும்
கண்டத்தில் தோளிரண்டானச் சென்னி மீதே. 40

(பொ-ரை) சொல்லவே, இன்னமொரு வித்தைகேள். எனக்கு நஞ்சுண்ட சித்தர் கூறினார். நல்ல வித்தை உனக்குக்

அஞ்சு சென்மம்—பல ஜென்மம். கருவி—வேல், கூரியவாள். பொன்னி—சத்தி. பூந்துபார்—செயலில் புகுந்து செய்துபார்.

## பாம்படக்க மூலிகைவேர்

போடவே யின்னமொரு வித்தை கேளு
        பூதலத்தில் கலப்பைவேர் பிடுங்கத் தேடி
வாடவே வேண்டாங்காண் ணீயு மப்பா
        அண்டரோ தயனைப்பாம் பணுகும்போது
நீடவே சென்னியிலே குளிச மிட்டு
        நிறுத்தவே யிதன்விபரம் நினைவாய்க் கேளு
சாடவே பிலமுண்டாம் மூலி வேரால்
        சண்டமாருதம் போலே தாக்க லாமே. 42

(பொ—ரை) இன்னமொரு வித்தை கேள். உலகத்தில் கலப்பை வேர் பிடுங்கத் தேடி அலையவேண்டாம். சூரியனை ராகு அணுகும் கிரகண காலத்தின்போது வகையாக உரு போடு. நிலைப்பாகத் தலையிலே குளிசமிட்டுக் கொண்டு, எதனையும் நிறுத்திக்காட்ட இதற்குரிய விபரம் சொல்லுகிறேன். நினைவாகக் கேள்.

பாம்புகளைக் கொல்லும் பலமுண்டாகும். மூலிகை வேரால் சண்ட மாருதக்காற்றுப்போல் சுழன்று தாக்கலாம்.

அண்டரோதயன் — உலகத்திற்குத் தோன்றுபவன் சூரியன்.
நிறுத்த — மந்திர வசியக்கட்டு செய்து நிறுத்த.
சண்டமாருதம் — சுழற்காற்று.
சாடவே பலமுண்டாம் — பகைவனோடு போரிட்டு வெல்லுதற்குரிய பலம் உண்டாகும்.

கிரகணத்தில், செடிக்குத் தீபதூபங்காட்டிப் பக்குவமாக அதந் வேரைப் பிடுங்கி சிரசில் கட்டிக்கொள். அதன் சக்தியால்,

பகைவனை வெல்லும், புலி வாயைக் கட்டும், வில் வித்தையில் பலம் பொருந்தியனவாய், உலகத்தோருக்கெல்லாம் தேவனாக இருப்பாய். இதில் சந்தேகம் இல்லை. பலவிதமான பெயரும் நட்பும் உண்டாகும். மங்கையரும் மோகத்தால் ஆடைகள் நெகிழ, உன்னைத்தேடி பின் தொடருவார்கள்.

**அனுசவேர்** — அனுசவேரின் சித்து. **மனுசம்** — பக்குவம். **சிரசு** — தலை. **மாத்தான்** — பகைவன். **தனு** — வில். **பிலவான்**—பலவான். **கனிச்சபேர்**—அனேகம்பேர், அனேக நற்பெயர், **கலை** — இடுப்பு ஆடை.

## துடரிவேர் வகையும், பயனும்

**துடரியிலே ஆறுவகைத் துடரி யுண்டு**
**சுரூபமெல்லாம் ஒன்றுபோ லாகும்மூலி**
**படரையிலே பரணிமுத லாறுக் குள்ளாம்**
**பால்பொங்கும் பருவத்தில் வேரை வாங்கி**
**அடரயிலே பரணிவே ரடறொட்டாது**
**ஆறுகளை கரத்திகைவே (ரட) றொட்டாது**
**துடரியிலே பிடித்திழுக்குந் ரோகினி வேர்**
**துஷ்டமிரு கமழைக்கும் மிருக சீரிடவேர். 45**

(பொ-ரை) நட்சத்திரப் பெயரமைந்த மூலிகைகளிலே ஆறு வகை உண்டு. அவற்றின் அடையாளமெல்லாம் ஒன்றேபோல் இருக்கும். இவை படரும் மூலிகை. வரிசையில், பரணி முதலாக, கார்த்திகை, ரோகணி, மிருக சீரிடம், திருவாதிரை, புனர் பூசம் என்னும் ஆறு பிரிவாக இம்மூலிகைப் பெயர்கள் அமையும்.

சூரிய உதயத்தில் பரணிவேர் பிடுங்கி, அதைச்சேர்த்து எடுக்கும்போது அதன் தூரு ஒன்றோடொன்று ஒட்டாது. ஆறு பிரிவாகவுள்ள கார்த்திகைவேர் அடக்கிப் பிடிக்க வராது.

## குருவாசகம்

சீரான சித்துவித்தை எல்லாம் சொன்னேன்
சிறுமதியால் விளையாட்டாய் செய்தி டாதே
தேராத செய்வினைகள் உன்னைச் சாடும்
செய்தவினை நரகத்தில் சேர்க்கும் பாவம்
தீராத கொடுநோய்கள் உன்னைச் சேரும்
தெருவிலே நாய்ச்சோறு தின்பாய் பாரு
மாறாது சாபமிது குருவின் வார்த்தை
மறவாமல் சித்திக்கப் புகழ தாமே. 47

(பொ-ரை) சிறப்பான சித்துவித்தைகள் செய்யும் உபாயங்கள் எல்லாவற்றையும் உனக்குச் சொன்னேன்.

அற்ப புத்தியால் விளையாட்டாக மனிதருக்குச்செய்து விடாதே. மாந்திரீகம் சித்தி பெறாத நிலையில் நீ பிறருக்குச் செய்த செய்வினைகள், உன்னையே தாக்கிக் கெடுக்கும்.

வேர், குளிசம், கற்பம், திலகம், பாவை-மந்திரம் ஆகிய வற்றால் நீ தவறாகச் செய்த செய்வினையின் பாவம், உன்னை நரகத்தில் சேர்க்கும்.

தீராத கொடிய நோய்களெல்லாம் உன்னையே வந்து சேரும்.

நிலைகெட்டுத் தெருவிலே நாய்த் தின்னும் எச்சிலைச் சோற்றைத் தின்பாய்.

குருவின் சாபவார்த்தை இது. மாறவே மாறாது. இதை நினைவில் வைத்துக் கொண்டு சித்தித்து இருக்க, உலகம் உன்னைப் புகழ்வதற்கு ஆகும்.



| | |
|---|---|
| இடங்க | —தொடர்ச்சிபெற |
| உதித்திடு தண்ணீர் | —சுரக்கும்நீர், சுனைத்தண்ணீர் |
| உபாயமாய் | —தந்திரமாக |
| உரு | —மந்திரச் சொற்களைத் தொடர்ந்து உச்சரித்தல் |
| உருமேகம் | —தேகத்தில் வரும் வெப்பப் படை நோய் |
| உரைத்தால் | —உச்சரித்துச் சொன்னால் |
| உள்சூடு | —வெட்டைச்சூடு. உடம்பினுள் எழும் சூட்டுநோய் |
| உளமையாய் | —உள்ளவாறாக |
| உறைத்திடும் | —தோய்ந்துவிடும் |
| உறையான் | —தங்கமாட்டான் |
| உன்பாரி | —உன்னிடத்தில் |
| ஊடுருவும் | —நடுவே சென்றுவிடும் |
| ஊறும் | —கசியும் |
| ஊன்பார்த்து | —உடலைப் பார்த்து |
| எட்டி | —எட்டிக்கொட்டை |
| ஓதடா | —உச்சரிப்பாய் |
| கஸ்தூரிப்பட்சி | —பறவை வகையிலொன்று |
| கஸ்தூரிப்பிள்ளை | —கஸ்தூரி சரக்கின் உற்பத்தி. மதம் மான். |
| கஸ்தூரி மூலி | —கஸ்தூரி மணமுள்ள மூலிகை. |
| கஞ்சமலர்மூர்த்தி | —பிரமன் |
| கட்டு | —நினைத்தபடி நிகழ்வது. கட்டுப்படல் |
| கடப்பாரை | —வலிய இரும்பு |
| கடும்பாரம் | —பிறரால் தூக்கமுடியாத கனம். |
| கடுவன் | —ஆண் சிறுத்தை. கழுதைப்புலி |
| கடுவாய் | —கழுதைப்புலி, ஓநாய் |
| கண்டம் | —கழுத்து |
| கதியெம்பார் | —நீயே கதி என்பார்கள் |
| கமலத்தோன் | —பிரமன். திருமால், கமலமுனி |
| கரு | —மூலச்சரக்கு |
| கருக்குரு | —துல்லியமான உரு. சூட்சமான மந்திரம் |
| கருக்குருவி | —வலியன்குருவி. கருவாட்டுவாலி |
| கருதிப்பாரு | —சிந்தித்துச் செய்துபார் |

| | |
|---|---|
| சங்காத்தி | —தொட்டசேர்க்கை, தொடர்ந்து நட்பு. |
| சட்டாகும் | —படிந்து உறையும் |
| சண்டமாருதம் | —வேகமான குளிர்க்காற்று |
| சனம் | —மக்கள், மனிதக்கூட்டம் |
| சத்திராதி | —கொடிய வஞ்சகன் |
| சம்பிறதாய் | —சம்பிரதாயம், முறைப்படியாக, |
| சர்ப்பம் | —நாகப்பாம்பு |
| சலம் | —தண்ணீர் |
| சன்னி | —சுரதோஷ நோய் |
| சாடவே | —நேருக்குநேர்செய்யவே. போரிடவே |
| சாரும் | —உன்னைச்சேரும் |
| சாலவித்தை | —உள்ளதை மறைத்துக் காட்டும் வித்தை. |
| சிட்டர் | —ஞானிகள் |
| சிட்டற | —ஒருதுளி இல்லாமல் |
| சித்தி | —பலவிதம், கைவந்த செயல் |
| சிமிழ் | —மை அடக்கும் சிறு குடுவை. |
| சீலிகை | —மெய்ச்சிலிர்ப்பு |
| சிறுசாக | —சிறியதாக |
| சீருடன் | —பெருமையுடன் |
| சுரம் | —சுரநோய், வெப்புநோய் |
| சுருக்கு | —உள்ளே பதனம் செய் |
| சூட்சம் | —சூட்சமம். நுட்பம் |
| சூடு | —உடல் சூடு, மூலச்சூடு. |
| சூனியம் | —செய்வினை |
| செப்பக்கேளு | —சொல்லக்கேள் |
| செம்போத்து | —செம்போத்துப் பறவை |
| சென்றுஆடி | —சென்று திளைத்து |
| சென்னி | —தலை உச்சி |
| சேருவார் | —கூடுவார்கள் |
| சேவி | —செபிப்பாய், உச்சரிப்பாய் |
| சேவிக்க | —உச்சரிக்க (மந்திரம்) |
| சேனை | —நெருக்கமாகும், உறவுச்சுற்றம். |
| சொரூபம் | —வடிவ அடையாளம் |
| சோதி | —தெளிவு. தெளிவாகத் தெரிதல். |

| | |
|---|---|
| நிதி | —பெருஞ்செல்வம் |
| நிதிதோணும் | —புதையல் செல்வம் கண்ணுக்குப் புலப்படும் |
| நிதியம் | —பொன் திரள் |
| நிமிர்த்திசெய்ய | —மேலும் துணிந்து செய்ய |
| நிருபன் | —நேரில் காட்டுபவன் |
| நிலவாக | —தண்மையாக |
| நிவிலுவேன் | —நினைவாகச் சொல்லுவேன் |
| நிறுத்த | —போக்க, நிற்கும்படி செய்ய |
| நீடவே | —நீடிக்கவே |
| நீத்தி | —நீறாகச் செய்து. (சுண்ணம்) |
| நேரிழை | —அழகிய பெண் |
| பஞ்சதருவேர் | —எடுக்கக் குறையாது வழங்கும் சக்திவேர் |
| பண்டிருந்த பெரியோர் | —பண்டைய ஞானிகள் |
| பண்டுபார் | —முன்னதாகப் பார் |
| பண்ணிவை | —செய்துவைப்பாய் |
| பணிமாறி | —செயல்மாற்றி |
| பதிதோணும் | —நினைத்த இடம் தோன்றும் |
| பதியம்பார் | —தொடர்ந்து பழக்கிப்பார் |
| பய்யவே | —பைய்யவே, மெதுவாக |
| பரராசன் | —வேறு நாட்டரசன். பகையரசன் |
| பரிகின்னம் | —மாற்றுச் செயல் |
| பரீச்சை | —சோதனை |
| பலிங்கு | —பிரதிபலிக்கும் கல் |
| பாத்திரம் | —உலோகப்பாத்திரம் |
| பாரடா | —செயலில் செய்து பார்ப்பாயடா |
| பாரம் | —மிகுந்த கனம் |
| பாரு | —அனுபவத்தால் பார்ப்பாயாக |
| பாளடா | —பாழடா. வீணாணதடா |
| பிரித்துக்கேளு | —வேறொன்றைக்கேள் |
| பிழைப்பு | —வயிற்றுப்பிழைப்பு |
| புத்திரன் | —மகன். பிள்ளை |
| புரவிவேகம் | —குதிரை வேகம் |

| | |
|---|---|
| மாயம் | —ஒன்று மற்றொன்றான வித்தை |
| மாறாட்டம் | —புத்தி தடுமாறச் செய்யும் தீமை |
| மானம்பாடி | —வானம்பாடிக் குருவி |
| மிக்கவே | —பெருகவே |
| மிடமாது | —திடகாத்திரமுள்ள பெண் |
| மிருகசாதி | —மிருக இனங்கள் |
| மின்னார் | —அழகிய பெண்கள் |
| முக்காலும் | —எப்பொழுதும் |
| முக்கு | —முழுகும்படி அழுத்து |
| முடியில்சூட | —தலைமுடியில் சூட்டிக்கொள்ள |
| முயல் | —முயற்சிசெய் |
| முறுகி | —முடுக்கி, இறுக்கி |
| முழிக்குமுன்னே | —கண்ணுக்கு முன்னே |
| முழுங்கலாம் | —விழுங்கலாம் |
| ம்னைமதியம் | —மூன்றாம் பிறைச்சந்திரன் (நிறைமதி) |
| மூலம் | —மூலிகைவேர் |
| மெத்தநன்று | —மிகவும் நன்று |
| மெய்த்திட்டு | —உடம்பு சிலிர்த்து |
| மெல்லிநல்லார் | —உடலழகுடைய மகளிர் |
| மேரு | —உயர்ச்சி, மேரு மந்திரம் |
| மேவியெடு | —சென்று பதனமாக எடு |
| மேவு | —மேலும் முயற்சி செய் |
| மொய்ப்பார் | —நெருங்கித்திரளாகச் சுற்றிக்கொள் |
| மொளிகள் | —விழிகள் |
| மோகம் | —காம மயக்கம் |
| மோகனம் | —வசீகர மன மயக்கம் |
| மோதிட | —தாக்கம் செய்ய |
| ரசம் | —பாதரசம் |
| ருத்திரமூலம் | —ருத்திரவேர் |
| ரூபம் | —வடிவத்தோற்றம் |
| லாடமூலி | —குதிரைக்குளம்பு |
| போகம் | —அனுபவ விளைவு |
| வக்கனாத்தி | —கொண்டைலாத்தி குருவி |
| வசமாக | —வசியமாக. அடங்கிவர |
| வதனம் | —நெற்றி |

# வேண்டுகோள்

*****

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள், அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும், பனையோலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவைகள், பல்வேறு இடங்களில் உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் எம்மிடம் அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவைகள் மக்களுக்குப் பயன்படும்.

எம்மிடம் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தார்களும், சுவடி எழுதியோரும் அழியாப் புகழை, எமது சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின், சுவடி தந்தார் பெயரும் இடம் பெறுவதோடு, அப்பதிப்பில் 5 பிரதிகளும் பெறுவர்.

எனவே, "நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்" என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளை, எமது மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறோம்.

இங்ஙனம்,

T. R. இராமசாமி, I.A.S.,

மாவட்ட ஆட்சியர் & இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்,
10—9—85.